REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர்: 3 (●) சென்னை 4—2—1979 ஞாயிறு (★)❋●❋(★) வெளியூர் 5—2—1979 திங்கள் (●) இதழ்: 108

## சதி வழக்கு தொடர டெல்லி தீவிரம்:

# இந்திரா மீண்டும் கைதாவாரா?



கலெக்டர்கள் மாநாட்டில் தமிழக ஆளுநர் பட்வாரி உரையாற்றுகிறார். முதலவர் புரட்சித் தலைவர், நிதியமைச்சர் நாஞ்சிலார், கே. ஏ. கே. ஆகியோர் கலந்துகொண்டனர்.

**புதுடெல்லி, பிப் 4- அவசர நிலைப்பிரகடனம் செய்யும்முன் தலைவர்களை கைது செய்ய திட்டம் தீட்டியதாக இந்திரா மீது வழக்குப்போட டெல்லியில் ஆலோசனை நடக்கிறது,**

1975 ஜூன் 25ந் தேதி அவசரநிலைப் பிரகடனம் செய்வதற்கு முன்பு கட்சித் தலைவர்களை கைது செய்ய சதித்திட்டம் தீட்டியதற்காக இந்திராமீது வழக்குத் தொடரவேண்டும் என்று ஜனதாக்கட்சி மேலிடத் தலைவர்கள் தற்போது மீண்டும் வற்புறுத்தி வருகிறார்கள்.

இந்திரா மீதும், அவரது முன்னாள் சகாக்கள் மீதும் வழக்குத் தொடர வற்புறுத்திவருகின்றனர்.

அவசரநிலை அத்துமீறல் சம்பந்தமாக ஷா கமிஷன் தீர்ப்புப்படி இந்திரா மற்றும் அவரது சகாக்கள் மீது வழக்குப் போடும் பொறுப்பு மத்திய புலனாய்வுத் துறையின் தனிப் பிரிவிடம் ஒப்படைக்கப் பட்டுள்ளது அந்த அதிகாரிகள் ஏற்கனவே முன்னாள் மத்திய அமைச்சர்களிடமும் முன்னாள்முதல்வர்கள் சிலரிடமும் வாக்குமூலம் வாங்கியுள்ளனர்.



### அரசு வழக்கா?

சதிச் செயல் புரிந்ததாக இந்திரா மீது தனியாக மத்திய அரசு வழக்கு போடுவதா? அல்லது மற்ற அத்துமீறல் வழக்குகளோடு சேர்த்து வழக்கை நடத்துவதா என்பது பற்றி இன்னும் முடிவு எடுக்கப்படவில்லை.

சதிச்செயல் சம்பந்தப்பட்ட வழக்குக்கு ஆளானவர் கைது செய்யப்படுவார்.

அவர் ஜாமீனில் விடப்படுவதில்லை ஆனால் விசாரணை நடத்தும் நீதிபதி உசிதப்படி இதில் முடிவு எடுப்பார்.

சதிச் செயல் வழக்குக்காக தனிகோர்ட் அமைப்பதற்கு நாடாளுமன்றத்தில் சட்டம் நிறைவேற்ற வேண்டிய அவசியம் இல்லை செசன்ஸ் கோர்ட்டிலேயே இந்த வழக்கைத் தொடரலாம்.

தம்மீது சதி வழக்குத் தொடரப்படலாம் என்பதை இந்திரா உணர்ந்து விட்டார் என்றும் எதிர் நடவடிக்கைக்கு அவர் தயாராக உள்ளார் என்றும் கூறப்படுகிறது, இதற்காக இரு காங்கிரஸ் இணைப்பை விரைவில் நடத்த இந்திரா விரும்புவதாகவும் தெரிகிறது.

சமீபத்தில்இந்திராகைது செய்யப்பட்டபோது நாடு முழுவதும் போராட்டம் நடத்தி 5 லட்சம் காங்கிரசார் கைதானார்கள்,

இனி மீண்டும் இந்திரா கைதானால் 5 லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் சிறை புகும் வண்ணம் அறப்போராட்டம் நடத்த இ. காங்கிரஸ் மேலிடம் விரும்புகிறது.

பலப்பரீட்சைக்கு

### தயார் என்கிறார் யாதவ்

புதுடெல்லி, பிப். 4- உத்தரப்பிரதேச முதல்வர் ராம் நரேஷ் யாதவுக்கு எதிராக போட்டிகோஷ்டியினர் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர்.

பெரும்பான்மையான எம் எல் ஏக்களின் ஆதரவு தனக்கு இருக்கிறது என்பதை யாதவ் நிரூபிக்க வேண்டும் என்று ஜனதா மேலிடம் உத்தரவிட இருக்கிறது. "அவ்வாறு மேலிடம் உத்தரவிட்டால் எனக்கு பெரும்பான்மை ஆதரவு இருப்பதை நிருபிக்கத் தயாராக இருக்கிறேன்" என்று யாதவ் அறிவித்துள்ளார்.

## தனிப்பட்டவர்கள் பொருட்காட்சி: தமிழக அரசு தடை

**சென்னை, பிப். 4- தமிழ் நாட்டில் தனிப்பட்டவர்கள் பொருட்காட்சி நடத்த தடை விதித்து அரசு உத்தரவு பிறப்பித்திருக்கிறது.**

இதுபற்றி தமிழ்நாடு அரசின் உத்தரவில் கூறப்பட்டிருப்பதாவது:

- கலைவிழா, பொருட்காட்சி போன்ற பெயர்களில் ஆபாச நடனங்கள், வளையங்கள் எறிதல், ஊசி (பின்) எறிதல், பணம் வைத்துசூதாடும் முறைகளையும் நிறுத்துவதற்காக, அரசு ஏற்கனவே உத்தரவு பிறப்பித்துள்ளது, எனினும் இம் முறைகள் இன்னமும் தமிழகத்தில் பல ஊர்களில் நடைபெற்று வருகின்றன.

இவற்றை அரசே நிறுத்துவது அரசாங்கத்தின் நோக்கமாக இருப்பதால், கலைவிழாபோன்றவற்றுக்கு அனுமதி வழங்கும் வழிகளை ஒழுங்குபடுத்தும் வகையில் சட்டத்தைதிருத்தம் செய்யும்செயற்குறிப்பு அரசின் பரிசீலனையில் உள்ளது.

### அனுமதி

அந்த திருத்தம் அமலுக்கு வரும் வகையில், மேலேசொல்லப்பட்ட எந்த விதமான கலைவிழா பொருட்காட்சி போன்றவற்றுக்கு அனுமதிவழங்கக் கூடாது என்று அரசு முடிவெடுத்துள்ளது.

குறிப்பிட்ட சட்டத் திருத்தம் வரும் வரையில் தனியாரால் நடத்தப்படும் எந்தவிதமான கலைவிழாவுக்கும் பொருட்காட்சிக்கும் அனுமதி வழங்கக்கூடாது என்று, பேருராட்சிகள், நகரியங்கள் ஆகியவற்றின் நிர்வாகஅதிகாரிகளுக்கும் மற்றும் ஊராட்சிஒன்றியங்கள், நகராட்சிகள், மாநகராட்சிகள் ஆகியவற்றின் ஆணையாளர்களுக்கும் அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

அப்படி அனுமதி வழங்க வேண்டிய அவசியம் ஏற்படும்போது அரசின் முன் அனுமதிபெற்று வழங்க வேண்டும் என்று இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது

இவ்வாறு அரசு உத்தரவில் கூறப்பட்டுள்ளது.

### சினிமாசெய்திகள் 'திரிசூலம்' விமர்சனம்

(4-ம் பக்கம்)

உளியை வீசியவர் எந்த அரசியல் கட்சியையும் சேர்ந்தவரல்ல

# கருணாநிதி புளுகு அம்பலம்

தலைமைக் கழக அறிக்கை 7-79 4-2-79

### நகரக்கிளை அமைப்பு உறுப்பினர் சேர்த்தல் பற்றி

நகராட்சி அமைந்துள்ள நகரங்கள் ஒவ்வொன்றிலும், நகரம் என்று கருதப்படும் ஒவ்வொரு நகரத்திலும் உள்ள ஒவ்வொரு வார்டிலும், தனி உட்கிளை அமைக்க வேண்டும். 'கிளைக்கழகங்களுக்கு உரிய விதிமுறைகள் உட்கிளைக்குப் பொருந்தும். உட்கிளையின் செயலாளரும், உட்கிளையால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதியும் சேர்ந்து நகரக்கிளையினை அமைக்க வேண்டும்.

நகராட்சிப் பகுதியில் உள்ள ஒவ்வொரு வார்டின் உட்கிளை அமைப்பாளர்கள், தலைமைக் கழகத்திலிருந்து நேரடையாக உறுப்பினர் சேர்க்கும் விண்ணப்பத்தாளைப் பெற்றுக் கொள்ளலாம். நகரக்கிளை அமைப்பாளர்கள் உறுப்பினர் தாள்களைத் தலைமைக் கழகத்திலிருந்து பெற்றிருந்தால், வார்டு வாரியாக உள்ள உட்கிளை அமைப்பாளர்களிடம் அந்தந்தத்தாள்களைக் கொடுத்து, அவர்கள் மூலம் உறுப்பினர்களைச் சேர்த்துத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பி வைக்கச் செய்யலாம்.

விண்ணப்பத்தாள்களில் உட்கிளை அமைப்பாளர்கள் தாம் கையொப்பமிட்டுத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்.

வார்டுகளில் உட்கிளை அமைப்பாளர்கள் இல்லாமலிருந்தால், நகரக்கிளை அமைப்பாளர்கள் தற்காலிக அமைப்பாளர்களை உட்கிளைக்கு நியமித்துத் தலைமைக் கழகத்திற்குப் பரிந்துரை செய்வார்.

சென்னை மாநகரம், மதுரை மாநகரம் ஆகியவை தனி மாவட்டங்களாக கருதப்படும். அங்கு வார்டுகளில் வட்டக்கிளைகள் அமையும்.

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்.

சென்னை
4-2-78

### ராதாபுரம் தொகுதி கழக அமைப்பாளரைத் தாக்க தி. மு. க. வெறியர்கள் முயற்சி

பணகுடி (திருநெல்வேலி மாவட்டம்) பிப 4 கருணாநிதியை நோக்கி உளி வீசியதாகக் கைதானவர் எந்தக் கட்சியையும் சேராதவர். அந்த நபர் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தைச்சேர்ந்தவர் என்று கருணாநிதி கும்பல் பொய்ப் பிரச்சாரம் செய்து வந்தது அம்பலமாகிவிட்டது.

நெல்லை மாவட்டம் ராதாபுரம் விஜயபாரதி சாலை சந்திப்பு திருப்பத்தில் வைத்து கருணாநிதி சென்ற வேன்மீது ஒருவர் உளி வீசியதாகக் கூறப்படுகின்றது.

உளி வீசியதாகக் கூறப்படும் ஆசாமியைபோலீசார் கைது செய்தனர். அவர் பெயர் செபஸ்தியான்.

இவர் மீது காவல்துறை அதிகாரிகள் வழக்குப்பதிவு செய்து நாங்குனேரி கோர்ட்டில் ஆஜர்படுத்தினர் அவரை 15 நாள்காவலில்வைக்க மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார்,

இந்தச் சம்பவத்தை வைத்து கருணாநிதி கும்பல் அரசியல் ஆதாயம் தேட முயற்சிக்கிறது,

கைதான நபர் கழகத்தைச் சேர்ந்தவர் என்று கருணாநிதி கூறிவருகிறார்,

### உண்மை என்ன?

ஆனால் அந்த நபர் எந்தக் கட்சியையும் சேராதவர் என்று விசாரணையில் தெரியவந்துள்ளது. வெளியூரைச் சேர்ந்த அந்த நபர் ஒரு தையல் தொழிலாளியாம். எந்தக் கட்சியையும் சேராதவர்.

அங்குள்ள காவல்துறை அதிகாரி ஒருவர் கருணாநிதியின் உறவினர் என்றும்கருணாநிதியின் ஊரைச் சேர்ந்தவர் என்றுக் கூறப்படுகிறது.

செபஸ்தியான் கழகத்தைச் சேர்ந்தவர் என்று அந்த போலீஸ் அதிகாரி சொன்னதாக ஒரு பத்திரிகை நிருபரும் கூறியுள்ளார்.

ஆகவே திட்டமிட்டு நாடகம் நடத்துபவர்கள் கருணாநிதி கும்பலைச் சேர்ந்தவர்களே என்று அம்பலமாகியுள்ளது.

இதற்கிடையில் கழகத் தோழர்களைத் தாக்கவும், தூண்டிவிடப்பட்டுள்ள திமுக வினர் முயற்சிக்கிறார்கள்.

ராதாபுரம் தொகுதி கழக அமைப்பாளர் நீலகண்டனை தாக்கவும் திமுக காலிகள் முயன்றுவருகிறார்கள்,

'உளிவீச்சு' நாடகத்தை வைத்து கருணாநிதி கும்பல் செய்துவரும் அரசியல் மோசடிகளில் மேலும் பல சம்பவங்கள் அம்பலமாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

### நிர்வாண சோதனை: பெண்கள் கடும் எதிர்ப்பு

சென்னை, பிப். 4 இங்கிலாந்தில் குடியேறச் செல்லும் இந்தியப் பெண்கள் மணமானவரா என்று கண்டு பிடிப்பதற்காக அவர்களை நிர்வாணமாக்கிலண்டனில் சோதனை நடத்தினார்கள் அல்லவா? சென்னையில் உள்ள "பெண்ணுரிமை இயக்கம் அந்தச் செயலைக் கடுமையாகக் கண்டித்துள்ளது. அப்படிப்பட்ட சோதனைகளை நடத்திய அதிகாரிகள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று இந்த சங்கம் கேட்டுக் கொண்டுள்ளது. இதற்காக இங்கிலாந்து பிரதமர் மன்னிப்பு கேட்க வேண்டும் என்றும் சங்கம் கேட்டுக் கொண்டது.

### இன்று மாலை (4-2-79) சூளை வ். வி. கோவில் தெருவில ப. உ. ச. பேசுகிறார்

## முதல்வர் துவக்கிவைத்த மோட்டார் பந்தயம்

சென்னை, பிப் 4- சென்னை சோழவரத்தில் நடைபெறும் அகில இந்திய மோட்டார் பந்தயத்தை தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தொடங்கி வைத்தார் மோட்டார் சைக்கிள் போட்டியில்வெற்றிபெற்ற "கென்யா" நாட்டு வீரருக்கு முதல்வர் பாராட்டு தெரிவித்தார்.

சென்னையை அடுத்த சோழவரத்தில் 22வது அகில இந்திய மோட்டார் பந்தயம் இன்று (ஞாயிறு) காலை தொடங்கியது.

இந்த மோட்டார் பந்தயத்தில் சென்னை, மலேசியா சிங்கப்பூர், இலங்கை, கென்யா, இங்கிலாந்து, பம்பாய், கல்கத்தா, பெங்களூர், கோவை ஆகிய இடங்களில் இருந்துபந்தய வீரர்கள் வந்து கலந்து கொண்டார்கள்.

இந்தமோட்டார் போட்டியில் இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் இருந்து 15 பெண்களும் இந்தப் பந்தயத்தில் கலந்துக் கொண்டார்கள்.

மோட்டார் பந்தயத்தை தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தொடங்கி வைத்தார். விழாவில் அவர் பேசுகையில் கூறியதாவது:

"பல்வேறு நாடுகளைச் சேர்ந்த மாநிலங்களைச் சேர்ந்த விளையாட்டு வீரர்கள் சிலஆயிரம ரூபாயைப் பெறவேண்டும், பாராட்டு பத்திரம் பெறவேண்டும் என்று இந்தப் போட்டியில் ஈடுபடவில்லை.

விளையாட்டுக் கலையை உய்விக்கவும் போட்டிகளில் ஈடுபட்டு தங்களைத் தாங்களே மகிழ்ச்சியாக்கிக் கொள்ளவும், மற்றவர்களை மகிழ்விக்கவும் தான் இத்தகைய போட்டிகளில் ஈடுபடுகிறார்கள்.

இந்தப் போட்டியில் கலந்துகொள்ள வந்திருக்கும் விளையாட்டு வீரர்களை அரசின் சார்பில் வரவேற்

(3ம் பக்கம் பார்க்க)

கலெக்டர்கள் மாநாட்டில் கலந்துகொண்ட அதிகாரிகள்.

# மொழியும் - பழியும்

சந்தை பெரியாரும், பேரறிஞர் அண்ணாவும் துவக்கிய மொழிப் போராட்டம் தமிழகத்தின் அரசியலையே மாற்றி அமைத்தது நடைநிந்த உண்மை. அன்று மூட்டப்பட்ட கனல் சிலவேளைகளில் தணிந்திருந்ததே தவிர அணைந்து போனதில்லை. தூங்கும் குதிரையை செத்த குதிரையென்று எண்ணி சிலர் ஏமாறலாம். குற்றம் குதிரையுடையதல்ல!

இந்தி பாடசாலைகள் மூலம் நுழைய முடியாது. அறிஞர் அண்ணாவின் தீர்மானம் அதைத் தடுத்து நிறுத்தியுள்ளது.

மத்திய அரசின் இலாக்காக்கள் மூலம் திணிக்கப்படுகிறது. மத்திய அரசில் பணிபுரிவோர் நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். மத்திய அரசை நடத்துவோரின் நடத்தை நம் அச்சத்தை உறுதி செய்கிறது. மூத்த தலைவர்களின் பேச்சுக்கள் இந்தி பேசாத மக்களுக்கு நேரு தந்த உறுதிமொழிக்கு உலைவைப்பது போல் தோன்றுகிறது.

இந்தி பேசாத மக்களின் உணர்ச்சிகளை ஒன்றுதிரட்டும் பெருமுயற்சியின் முதல்கட்டமாக தமிழக முதலவர் புரட்சித்தலைவர் அவர்கள் ஆந்திரம், கேரளம், கருநாடகம் ஆகிய மாநிலங்களின் முதல்வர்களை அழைத்து விவாதித்து இந்தி திணிப்பைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். இந்த அரிய சாதனையை மூடிமறைக்க முயலும் திமுகழக தலைவரை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது, ஆனால் நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமுங் கொண்ட முத்தமிழ்க் காவலர் திரு கி ஆ பெ, குன்றக்குடி அடிகளார் போன்றவர்கள் முதல்வருக்கு புகழ்மாலை வேண்டாம் கலைஞர் கோபித்துக்கொள்வார், முதல்வரை உற்சாகமூட்டியிருக்கலாமே, ஏன் செய்யவில்லை என்பது புரியவில்லை.

'இந்தி எதிர்ப்பு செத்த குதிரை' என்று சொன்னவர்மீது டாக்டர் கலைஞருக்கு கோபம் வரவில்லை!

அமைதியாக உறங்கிக் கொண்டிருந்த இந்தி எதிர்ப்பு எனும் குதிரையை, இந்தி வெறியர்கள் தட்டி எழுப்ப, அதனை கோபாலபுரத்தார் செங்கோட்டை நோக்கி செலுத்தாமல் இராமாவரம் தோட்டத்தைக் குறிவைத்து ஏவுகிறார்.

அது மட்டுமல்ல பிரதமர் வாணியில் முதல்வரை மண் குதிரை என்கின்றார்.

முதல்வர் எம் ஜி ஆர் மண் குதிரையாம். எப்படி இவரை நம்புவது என்கிறார். அது மட்டுமல்ல. "எம் ஜி ஆரை நம்பி இவ்வளவு பெரிய பிரச்சினையில் தமிழ்நாட்டு மக்களை நான் காட்டிக் கொடுக்கத் தயாராயில்லை" என்கிறார்.

தமிழக மக்கள் இவருடைய பாதுகாப்பில் இருப்பது போலவும் அதைக் காட்டிக் கொடுக்க யாரோ முயல்வது போலவும் தன் கற்பனை வளத்தைக் காட்டிக் கொண்டுள்ளார்.

தமிழக மக்கள் தங்களை கலைஞர் குறிப்பிடுவது போல் மண்குதிரை என்பதால் அல்ல பொன் (நிற) குதிரை என்பதால்தான், ஒப்படைத்துக் கொண்டுள்ளார்கள்.

"நான் இன்று எதிர்க்கட்சிப் போராட்டம் நடத்துகின்றேன், நீங்கள் எதிர்க் கட்சியாய் இருந்தீர்கள் இந்தியை எதிர்த்துப் போராட்டம் நடத்தத் தெம்பு, திராணி, சக்தி, வல்லமை ஏன் இல்லாமல் போயிற்று?" என்கிறார் கலைஞர்.

"இன்று நாங்கள் ஆளுங்கட்சியாக இருக்கிறோம் தென் மாநில முதல்வர்கள் மாநாடு கூட்டி இந்தித் திணிப்பை எதிர்த்துத் தீர்மானம் போட்டோம் ஏழாண்டு காலம் முதல்வராக இருந்தீர்களே- இப்படி ஒரு முயற்சி எடுக்க தெம்பு- திராணி சக்தி வல்லமை உங்களுக்கு இருந்ததா?" என்று யாராவது கேட்டால் என்ன பதில் வரும்?

அல்லது தி. மு. கழகம் ஆட்சியில் இருந்தபோது இந்தி திணிப்பை எதிர்த்துப் போராடவேண்டிய அவசியம் வந்ததா? வந்திருந்தால் ஏன் பதவி ஆசையில்லாத கலைஞர் எதிர்க்கவில்லை?

நெருக்கடிநிலையைப் பயன்படுத்தித்தான் இந்தித் திணிப்பு தீவிரப்படுத்தப்பட்டது என்றும் கூறுகிறார்! ஆறரை ஆண்டாக ஏன் எதிர்க்கவில்லை என்கின்றார். நெருக்கடிநிலை அறிவிக்கப்பட்டதே 1975 பிற்பகுதியில்தானே!

கலைஞர் ஏன் இப்படி குழப்புகிறார்? கோபம் அவரின் அறிவை மறைத்து விட்டது போலும்.

அ. தி. மு. க. ஆட்சி இந்தியின் வேகத்தைத் தடுக்கும் கேடயமாக இருக்கிறதாம். இப்போதிருக்கும் ஆட்சி இந்திக்கு நடை பாவாடை விரிக்கிறதாம்.

அப்போது இந்தி வேகமாக வந்ததா? அப்படியென்றால் அதை மறைத்துவைத்த குற்றவாளி யார்?

கலைஞர் சக்திக்குக் கேடயத்தை ஏந்தியிருந்தால் புரட்சித் தலைவர் சக்திக்கு வாளேந்தலலவா எடுப்பர்?

"மொழிச் சிக்கலில் வாக்கெடுப்பு நடத்துவது அண்ணாவுக்கே எதிரானது." கலைஞர் கூறியுள்ளார்! இவருக்கு எப்படித் தெரியும்? அறிஞர் அண்ணாவைப்போய்க் கேட்டுவிட்டு வந்தாரா?

அறிஞர் அண்ணா மொழிபற்றி இரு தீர்மானங்களை சட்டமன்றத்தில் நிறைவேற்றினார். சரித்திரத்தின் பொன் ஏட்டில் பதிந்துவிட்ட சிறப்புமிகு அந்தத் தீர்மானங்களை சந்தேகத்தினால் அல்ல, சந்தேகிகளின் சஞ்சலத்தைப்போக்க மக்கள் மன்றத்தின் முன்வைத்து ஒப்புதல் பெற புரட்சித் தலைவர் முனைகிறார்.

இருநூற்றி முப்பத்து நான்கு உறுப்பினர்களின் அங்கீகாரம் மட்டுமல்ல- நாலரைகோடி மக்களின் ஒப்புதல் பெறப் போவதாகக் கூறுகிறார்.

இந்நாள் முதல்வருக்கு மக்களிடத்தில் நம்பிக்கை இருக்கிறது. முந்நாள் முதல்வருக்குச் சந்தேகம் பிறக்கிறது.

**இன்றையமுதல்வருக்கு ஆணவமாம்- கலைஞர் சர்வ கட்சிக் கூட்டம் கூட்டினால் வருகிற தலைவர்களை வாயிற்படியில் நின்று வரவேற்பாராம்! எந்தக் கூட்டத்தைக் கூட்டி இப்படி வரவேற்றார்? எல்லா தலைவர்களும் வந்து காத்துள்ளார்கள் என்று சேதி வந்த பின்னர் கலைஞர் தனக்கே உரித்தான பந்தாவுடன் வருவார். அனைவரும் எழுந்து நிற்பார்கள் சுற்றிப் பார்த்துவிட்டுப் பின்னர் உட்காருவார். இது தானே நானறிந்த உண்மை?**

அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் தனக்கேற்பட்ட சிக்கலை மீண்டும் சந்திக்க அஞ்சி 'இனி கலந்துகொள்ள மாட்டேன்' என்கிறார்.

அனைத்துத் தலைவர்களும் முதல்வரின் வருகைக்காகக் காத்திருப்பர்—இது அன்றைய நிலை

அனைத்துக்கட்சித் தலைவர்களின் வருகைக்காக முதல்வர் காத்துள்ளார்—இது இன்றைய நிலை

இன்றைய முதல்வர் முதல் சட்டமன்றக் கூட்டத்தொடரில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகமும், தி.மு.கவும் இரட்டைக் குழல் துப்பாக்கி" என்றாரே அதைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறியது யார்?

'மொழிப் போர்'. அரசியல் ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டது! அதைஅரசியலாக்கி சிக்கலை உண்டாக்குவது பெருந்தன்மை ஆகாது!

**மொழிப்பிரச்சினை குறித்து கழக அரசின் மீதும் புரட்சித் தலைவர் மீதும் பழி சுமத்தி வரும் கருணாநிதியின் வாதங்களை தவிடுபொடியாக்குகிறார் ப உ ச.**

இந்தித் திணிப்பை தமிழகத்திலுள்ள எந்தக் கட்சியும், இன்று ஏற்றுக் கொள்ளவில்லை! இந்த அரிய சந்தர்ப்பத்தை பயன்படுத்தி ஏகோபித்தக் குரல் கொடுக்கவேண்டிய வாய்ப்பைக்கெடுத்த குற்றவாளியை நிச்சயம் தமிழகம் மன்னிக்காது.

'அண்ணா கருஞ்சட்டை அணியச் சொன்னாரா? ஊர்வலம் போகச் சொன்னாரா' என்றால் 'அண்ணா குல்லா அணியச் சொன்னாரா' என்கிறார் கலைஞர் தரங்கெட்ட இந்த உதாரணத்தை தன் கட்சியிலுள்ள பண்பறியா பேச்சாளர்களை விட்டுப்பேசச் சொல்லியிருக்கலாம்! ஒரு வேளை அவர்களும் இது தங்கள் தரத்திற்கும் கீழானது என்று எண்ணி மறுத்து விட்டார்களோ.

"இந்தியை எதிர்த்துப் போராட 'எம் ஜி ஆர் தயாரா?'" கலைஞர்.

"நான் தயார். நீங்கள் வருகிறீர்களா;" முதல்வர்.

"நீ யார் என்னைக் கூப்பிட? உனக்கென்ன யோக்யதையிருக்கிறது." கலைஞர்.

இந்தித் திணிப்பை எதிர்த்துத் தீர்மானம் சட்டமன்றத்தில் கொண்டுவந்து நிறைவேற்ற எம்.ஜி ஆர். தயாரா?- கலைஞர்.

"அறிஞர் அண்ணா சட்டமன்றத்தில் நிறைவேற்றிய தீர்மானம் அப்படியே இருக்கிறது. அந்த தீர்மானத்தை மக்கள் மன்றத்தில் வைத்து வாக்கெடுப்பு (Refrendum) நடத்துவேன்"-முதல்வர்

"அண்ணா நிறைவேற்றிய தீர்மானத்தை மக்கள் மன்றத்து முன் வைப்பதா: இது அண்ணாவுக்கே அவமானம் -கலைஞர்

"இந்தித் திணிப்பை எதிர்ப்போம் என்பதை மாற்றி இனி இந்தியையே எதிர்க்கிறோம்" -கலைஞர்.

"இந்தியையே எதிர்க்கிறீர்களா? ஒரு மொழியை எதிர்ப்பது சரியா? நாங்கள் இந்தித் திணிப்பை எதிர்க்கிறோம்" -முதல்வர்.

"இந்தியை எதிர்க்கிறோம் என்றால் படையைத்திரட்டிக் கொண்டு வடக்கே போய் முற்றுகையிட்டுப்போரிடுவது என்பது பொருளல்ல. இந்தி தமிழகத்தில் நுழையாதவாறுத் தடுக்க அரண் அமைக்கிறோமே அதற்குத்தான் இந்தி எதிர்ப்பு என்று பெயர்" கலைஞர்

"இந்தி எதிர்ப்பில் மாணவர்கள் எத்தகைய உணர்வுகளைக் கொண்டுள்ளனரோ அதே உணர்வுகொண்ட அரசு நடக்கும்போது மாணவர்கள் கிளர்ச்சிகளில் ஈடுபடலாமா என்றேன். தீப்பந்தங்களோடு இருந்த மாணவர்கள் அமைதியாகக்கலைந்து சென்றனர்- கலைஞர்-

"இந்திப் பிரச்சினையில் அறிஞர் அண்ணா என்ன உணர்வோடு இருந்தாரோ, அதே உணர்வோடு இன்றைய அரசு இருக்கும்போது கறுப்புக்கொடி ஊர்வலம் நடத்தலாமா?"-முதல்வர்

இது போன்ற செய்திகளைப் படித்தால் தி மு.க தலைவரின் குழப்பம் தெரிகிறது. அனுதாபப்படத்தான் தோன்றுகிறதேயொழிய ஆத்திரம் பிறப்பதில்லை.

இந்தியைத்திணிப்பதால் இந்தியா தூள்தூளாகி விடும் என்று எத்தனையோ தலைவர்கள் தியாகிகள் அறிஞர் பெருமக்கள் வலியுறுத்தியுங்கூட வட புலத்தவர்கள் இந்த அபாயத்தை உணர்ந்ததாகத் தெரியவில்லை.

ஆங்கிலம் எவ்வளவு காலம் நீடித்திருக்கவேண்டுமென்றுமுடிவெடுக்கவேண்டியவர்கள் இந்திபேசா தமக்களே" என்று பண்டித நேரு உறுதியளித்தார் அன்று "இந்தியா இந்தியாவா" இந்தமுடிவெடுக்க வேண்டியவர்கள் நாமல்ல இந்தி பேசும் மக்கள் தான்!

**இந்தியத் திருநாடு உடைந்தால் அந்தப் பழியை ஏற்றுக் கொள்ள வேண்டியவர்கள் இந்தியை திணிப்பவர்கள்தான் மொழியைத்திணித்து பழியை ஏற்காதீர் என்று எச்சரிக்கின்றோம்!**

மொழிப்போரை பலவீனப்படுத்தும் வழிகளைத்தேடி பழியைச் சுமக்காதீர்' என்று தி. மு. க. வினரை வேண்டுகிறோம்.

# காட்டூர் கிருஷ்ணசாமி முதலாண்டு நினைவுநாள்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் செயல் வீரரும், கழக வழக்கறிஞரும் கோவை கிழக்குத் தொகுதி கழக அமைப்பாளராக இயக்கம் தொடங்கியது முதல் பணியாற்றி வந்தவருமான காட்டூர் கிருஷ்ணசாமி அவர்கள் விபத்தில் சிக்கி நம்மையெல்லாம்விட்டுப்பிரிந்துபிப்ரவரி10-ந்தேதியுடன்ஓராண்டாகிறது. காட்டூர் கிருஷ்ணசாமியின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் பிப்ரவரி 10-ந்தேதி காலை அமைதி ஊர்வலம் கோவை மாவட்டக் கழக அலுவலகத்திலிருந்து புறப்பட்டு காட்டூர் கிருஷ்ணசாமி அடக்கம் செய்யப்பட்ட கல்லறை அடையும்.

இந்த நினைவுநாள் ஊர்வலத்தில் அமைச்சர்கள் கே ஏ கே, அரங்கநாயகம், குழந்தைவேலு ஆகியோரும் கழக சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினர்களும், மாவட்ட அமைப்பாளர்களும், தொகுதி வட்டக் கிளை அமைப்பாளர்களும், மகளிர் பிரிவு, மாணவர் பிரிவு, தொழிற்சங்கப் பிரிவு ஆகியவற்றைச் சேர்ந்த தோழர்களும், சார்புமன்ற தோழர்களும் கலந்து கொள்வர்.

இதனையே அறிவிப்பாக ஏற்று மறைந்த காட்டூர் கிருஷ்ணசாமியின் நினைவுக்கு அஞ்சலி செலுத்த மாவட்டம் முழுவதுமுள்ள கழக சார்புமன்ற தோழர்கள் பெருமளவில் கலந்து கொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்,

திருப்பூர் மணிமாறன் எம் எல் ஏ,
கொள்கை பரப்புச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்.

சென்னை
4-2 79



நெல்லுக்கு நியாய விலை

# தமிழகஅரசின்கருத்துக்கு குடியரசு தலைவர் ஆதரவு: குழந்தைவேலு பேச்சு

தருமபுரி, பிப் 4 விவசாய விளை பொருட்களுக்கு நியாயமான விலை கொடுக்கவேண்டும் என்ற தமிழக அரசின் கோரிக்கைக்கு குடியரசு தலைவர் ஆதரவு தெரிவித்துள்ளார் இந்த தகவலை விவசாய அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்

தருமபுரி ஒழுங்குமுறை விற்பனைக் கூடத்திற்கு ரூ. 4.91 லட்சம் செலவிலும் கிருஷ்ணகிரி ஒழுங்குமுறை விற்பனைக் கூடத்திற்கு ரூ. 5-10 இலட்சம் செலவிலும் புதிய கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன. அக்கட்டிடங்களின் திறப்புவிழா ஜன. 31ல் சிறப்பாக நடைபெற்றது.

பல்லாயிரக்கணக்கான உழவர்பெருமக்கள்திரண்டு வந்து விழாவில் கலந்து கொண்டனர். புதிய கட்டிடங்களைத் திறந்து வைத்து உரையாற்றுகையில் அமைச்சர் ப.குழந்தைவேலு மேலும் கூறியதாவது:

"தமிழக விவசாயிகள் விளைவிக்கும் பொருள்களுக்கு நியாயமான விலை கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதே எங்கள் லட்சியம். அந்த இலட்சியத்தை நிறைவேற்றவே புரட்சித்தலைவர் அரசு, 'கோதுமைக்கு விலையை உயர்த்தியுள்ளது போல் நெல்லுக்கும், கரும்புக்கும் விலையைஉயர்த்திக் கொடுக்க வேண்டும்' என்று மத்திய அரசை வற்புறுத்தி வருகிறது. அத்துடன் வேளாண்மை விளை பொருள் விற்பனைக்கு என்று தமிழகத்தில் தனியொரு துறையை ஏற்படுத்தி, தமிழகமெங்கும் உள்ள ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்களில் உள்ள வசதியைப் பெருக்கி விற்பனையை ஊக்குவித்து வருகிறது"

## விற்பனை வசதி

தமிழகமெங்கும் உள்ள 170 ஒழுங்குமுறை விற்பனைக்கூடங்களில் உள்ள விற்பனை வசதியைப்பெருக்கிடவும், மேலும் புதிதாக 50 ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்களைத் துவக்கவும் உலக வங்கியிடம் இருந்து ரூ 70கோடி கடன் கோரியுள்ளோம். அக்கடன் விரைவில் கிடைக்கும் நிலை உள்ளது. அக்கடன் கிடைத்ததும் ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்களில் மேலும் வசதியைப் பெருக்கநடவடிக்கை எடுக்கப்படும், இதனால்விவசாயிகள் தங்கள் விளை பொருள்களை ஒழுங்கு முறை விற்பனைக் கூடங்கள் மூலம் விற்று, நல்ல விலை பெற்று வாழ்வை வளப்படுத்திக் கொள்ள முடியும். எனவே விவசாயிகள் அனைவரும் தங்கள் விளை பொருள்களை ஒழுங்கு முறை விற்பனைக் கூடம் மூலமாகவே விற்றுப் பயன்பெற முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்."

இவ்வாறு அமைச்சர் ப. குழந்தைவேலு கூறியிருக்கிறார்.

# பிரதமர் சென்னை வரும் நேரம் மாறுதல்

சென்னை, பிப் 4. பிரதமர் மொரார்ஜி தேசாய் இலங்கையிலிருந்து டெல்லி திரும்பும் வழியில் அவரது விமானம் 6ந்தேதி பிற்பகல் 3-45 மணிக்கு மீனம்பாக்கம் விமான நிலையத்திற்கு வந்து சேர்ந்து, ஒரு மணி நேரம் தங்கியபிறகு, 4-45 மணிக்கு டெல்லிக்குப் புறப்படும்என்று ஏற்கனவே திட்டமிடப்பட்டிருந்தது.

ஆனால் இதில் சிறிது மாற்றம் ஏற்பட்டுள்ளன. அவர் முப்பது நிமிடம் முன்னதாக 3-15 மணிக்கு சென்னை வந்து 4-15 மணிக்கு டெல்லி புறப்படுவார்.

# ஆதிதிராவிடர் நலத் திட்டத்துக்கு ரூ. 17கோடி ஒதுக்கீடு

## சவுந்தரபாண்டியன் தகவல்

சென்னை பிப் 4- ஆதிதிராவிடர் நலதிட்டங்களை நிறைவேற்றநடப்பு ஆண்டில் ரூ16கோடியே 95 லட்சம் ஒதுக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

ஆதிதிராவிடர் நலக்குழுவில் அமைச்சர்சவுந்தரபாண்டியன் தெரிவித்த தகவல்கள் வருமாறு:

ஆதிதிராவிடர்ஆதிவாசி மக்கள் நல திட்டத்துக்கு நடப்பு ஆண்டில் ரூ 16.95 கோடிஒதுக்கப்பட்டுள்ளது இதில் ரூ. 10 கோடி அவர்களது கல்விக்காகச் செலவிடப்படும்.

உயர்நிலைப்பள்ளி மாணவர்க்கு 10 விடுதிகளும், கல்லூரி மாணவர்களுக்கு ஒரு விடுதியும் மற்ற மாணவர்களுக்கு 3 விடுதிகளும் கட்டப்படும். 2 தனியார் விடுதிகளை அரசே ஏற்று நடத்தவும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

தனித்தகுதி பெறும் மாணவர்களுக்கு உதவ ரூ 10 லட்சம் மானியம் கொடுக்கப்படும்.

விடுதி மாணவருக்கு உணவுக்காக செலவிடும் தொகையும் உயர்த்தப்படுகிறது. சென்னையிலுள்ள விடுதிக்கு தலா ரூ 35 வீதமும், மற்ற பகுதிகளில் உள்ள விடுதி மாணவர்களுக்குத் தலா ரூ 30 வீதமும் வழங்கப்படும்.

நடப்பு ஆண்டில் ஆதிதிராவிடர்களுக்கு வீடு கட்ட ரூ 2 கோடியே 20 லட்சம் ஒதுக்கப்படும்.

ஏழை ஆதிதிராவிட மக்களுக்கு ஈமச்சடங்கு நடத்த உடனடியாக ரூ. 50 உதவிப்பணம் வழங்கப்படும், இதற்கு ரூ.4.33 லட்சம் நிதி ஒதுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

★ நாட்டிலே சிறந்த நிர்வாகத்திறன் வாய்ந்தது என்ற நற்பெயரை தமிழகம் ஈட்டியுள்ளது. ★ மதுவிலக்கு அவசர சட்டம் தவருக பயன்படுத்தப்பட்டதாக எந்த எடுத்துக் காட்டும் இல்லை. ★ வெள்ளத்துயர் துடைப்பில் தீவிரப் பணி

# தமிழ்நாடு அரசுக்கு ஆளுநர் பாராட்டு

## மாவட்ட ஆட்சித்தலைவர்கள் மாநாட்டில் பேருரை

சென்னை, பிப். 4- நாட்டிலேயே சிறந்த நிர்வாகத் திறன் கொண்டது என்ற நற்பெயரை தமிழகம் ஈட்டியுள்ளது. மதுவிலக்கு அவசரச்சட்டம் தவருகப் பயனபடுத்தப்பட்டதற்கு எந்த எடுத்துக்காட்டும் இல்லை என்று ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி மாவட்ட ஆட்சிததலைவர்கள் மாநாட்டில் கூறினர்.

மாவட்ட ஆட்சித்தலைவர்கள், காவல்துறை அதிகாரிகள் மாநாடு இன்று காலை துவங்கியது

தலைமைச்செயலக புதிய கட்டிடத்தில் நடந்த இந்தக் கூட்டத்தை ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி துவக்கி வைத்தார்.

முதல்வர் புரட்சித் தலைவர் மற்றும் அமைச்சர்கள் கலந்து கொண்டனர்,

நாஞ்சிலார், பண்ருட்டி ராமச்சந்திரன், கே ஏ கே, எஸ் டி எஸ், ஆர் எம் வீ, கே. நாராயணசாமி, அரங்கநாயகம், காளிமுத்து, ராகவானந்தம், சவுந்தர பாண்டியன், பொன்னையன் குழந்தைவேலு, ராசா முகமது, ஆர். சவுந்தர ராசன், பி டி எஸ்., சுப்புலட்சுமி ஆகியோர் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

தலைமைச் செயலாளர் கார்த்திகேயன். காவல்துறை மாநில தலைமை அதிகாரி ஸ்டிரேசி மற்றும் காவல்துறைஉயர் அதிகாரிகள் அரசு செயலாளர்கள் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

கூட்ட துவக்கத்தில் தலைமை செயலாளர் கார்த்தி கேயன் வரவேற்புரை நிகழ்த்தினர்.

இந்தக் கூட்டத்தில் விவாதிககப்பட இருக்கும் விஷயங்களைப் பற்றி அவர் விளக்கினர்.

### விவாதிக்கும் பிரச்சினைகள்

இன்றையகூட்டத்தில்சட்டம் ஒழுங்கு நிலை குறித்து விவாதிக்கப்பட்டது.

மதுவிலக்கை செயல்படுத்துதல் விபசாரத் தடைச் சட்டத்தில் செய்யப்பட இருக்கும் திருத்தங்கள் தமிழ்நாட்டில் குற்ற நிலவரம் ஆகிய பிரச்சினைகள் விவாதிக்கப் படுகின்றன.

பிற்பகல் மாநாட்டில் குடும்ப நல திட்டம் தூய நிர்வாகப நிலவிட திடீர் சோதனையிடும் திட்டத்தை ஆய்வு செய்தல், நிலவரி அரசுக் கடன்களில் வசூல் குறித்த கொள்கை- கூட்டுறவு கடன்களின் வசூல் - பிராட்மா முறை செயல்படும் விதம், அரிசனங்களுக்கு இழைக்கப் படும் கொடுமைகளையும் துன்பங்களையும் திறம்பட சமாளித்தல், உடல் ஊனமுற்ேறார் உதவித்தொகை திட்டத்தின் செயல் வரம்பை விரிவுபடுத்தல். பகுதிஊதியத்தை உணவுப் பொருளாக வழங்கும் திட்டம்-வனங்களில் இருந்து கள்ளத்தனமாக மரங்கள்கட த்தப்படுவதை தடுப்பது குறித்தும் ஆட்சித் தலைவர்கள் மாநாட்டில் விவாதிக்கப்படுகிறது

மாநாட்டில் ஆளுநர் பிரபுதாஸ்பட்வாரி நிகழ்த்திய தலைமை உரை வருமாறு:

நிர்வாகத்திலும், பொது வாழ்விலும் இலஞ்ச ஊழலற்ற, வன்முறையற்ற எல்லாக் கேடுகளுக்கும் மூல காரணமான குடிபழக்கத் தீமையற்ற ஒரு சமுதாய அமைப்பு உருவாக வேண்டும், இதுவே நாம் வகுத்துக்கொண்டுள்ள குறிக்கோளாகும் அக்குறிக்கோளை நாம் அடைய அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப் பட்டுவருகின்றன. நானும் நமது முதலமைச்சர் அவர்களும் பிற அமைச்சர்களும் பல பொது மேடைகளில் இதுபற்றி விளக்கித் தெளிவாகக் கூறியுள்ளதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள்.

நடைமுறையில், அரசு வகுக்கின்ற திட்டங்களின் முழுப்பலனும் மக்களைச் சென்றடைய முடியாதவாறு பல பிரச்சினைகள் தோன்றிவிடுகின்றன. இவற்றைச் சமாளிக்கப் புதிய உத்தியைக் கையாள வேண்டியுள்ளது.

### ஊழலைப் போக்க

நீங்கள் விரைந்து எடுக்கும் நடவடிக்கைஊழலைப் போக்கப் பெரிதும் உதவும் ஊழலை ஒழித்துக்கட்ட வேண்டுமென்பதில் நமது அரசு மிகத் தீவிரமாக இருந்த போதிலும். கீழ் மட்டங்களில் ஊழல்கள் இருப்பதாகஇன்னும்புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன, நிர்வாகத்தில் ஊழலே இல்லை என்னும் ஒரு நிலையை உருவாக்கப் பலமுனை நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ள வேண்டும்.

கிராமப்புற வளர்ச்சித் தொடர்பான கண்ணோட்டத்தில் நாடெங்கிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டுள்ளதைத் தற்போது காணலாம்.

மதுவிலக்குப் பிரச்சினையைப் பொறுத்தமட்டில், மதுவிலக்கைத் திறம்படச் செயல்படுத்த எல்லா நடவடிக்கைகளையும் அரசு எடுத்து வருகிறது. மதுவிலக்குத் தொடர்பாக அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டபோது, இந்தஅவசர சட்டம் தவருகப் பயன்படுத்தப் படலாம் என்று சிலர் அச்சமுற்றனர் ஆனல், இந்த அவசரச் சட்டம் தவருகவும் பயன் படுத்தப்பட்டதென்பதற்குத் திட்டவட்டமானஎந்தவொரு எடுத்துச் காட்டும் நமது கவனத்திற்கு வரவில்லை.

இப் பிரச்சினை குறித்து நாம் மிகவும் விழிப்புடன் இருக்கவேண்டும். தூய நிர்வாகம் நடைபெறுகிறது என்ற நம்பிக்கையைப் பொது மக்களிடம் நாம் ஏற்படுத்த வேண்டும். காவல் துறையினர் மிகுந்த கவனத்துடன் பணியாற்ற வேண்டியவர்களாக உள்ளனர்.

கிராமப்புற வளர்ச்சியைப் பொறுத்த மட்டில், கிராமப்புற வேலை வாய்ப்புக் குறித்து பல்வேறு திட்டங்களை மேற்கொள்ளவும் அவற்றிற்கு உதவி புரியவும், இரண்டு நிறுவனங்களின்பணியை ஒன்றுதிரட்டுவதோடு, அந் நிறுவனங்களை ஊக்குவிக்கவும் வேண்டும். மருத்துவ முகாம்களுக்கு, குறிப்பாக உலகக் குழந்தைகள் ஆண்டு கொண்டாடப்படும் இவ்வாண்டில் குழந்தைகள பிரச்சினைகளுக்கும் பிற சமூக பிரச்சினைகளுக்கும் தீர்வுகாண தொண்டு நிறுவனங்களை அதிக அளவிற்குப் பங்கு பெறச் செய்தாக வேண்டும். குடும்ப நலத் திட்டத்தில் நமது மாநிலம் சிறந்த பணி ஆற்றி வருகிறது என்ற போதிலும், இந்த முக்கியமான பணியில் நாம் மேலும் அதிகக் கவனம செலுத்த வேண்டும்.

காவல்துறை அதிகாரிகள், ஒருசார்பாகப் பணி புரிகிறார்கள் என்று தங்கள் மீது குற்றம் சாட்டப் படாத வண்ணமும், உதவி தேடி அணுகுவோருக்குத் தவருது நீதி வழங்கப் படுகிறது என்ற பாராட்டுதலைப் பெறும் வண்ணமும அவர்கள்பணியாற்ற வேண்டும்,

காவல் நிலையங்களுக்கு வரும் மக்களிடம் கனிவுடனும் பண்புடனும் நடந்து கொள்வதற்கான சூழ்நிலையை நாம் உருவாக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன், புகார் செய்கின்றவர்களிடம் கனிவுடனும் அனுதாபத்துடனும் நடந்து கொள்வதால் காவல்துறையினருக்கு இழப்பு ஏதும் ஏற்படுவதில்லை. புகார் செய்கின்றவர்களிடம் கனிவோடும், பரிவோடும் நடந்து கொள்வதாலேயே அவர்களது துன்பத்தில் பாதியளவு குறைந்துவிடும்.

### அதிகாரிகள் பணி

அண்மையில் ஏற்பட்ட பெருவெள்ளத்தின்போது, எல்லாத் துறைகளையும் சேர்ந்த மாவட்ட அதிகாரிகள், ஆற்றிய பணிகள் அனைத்தையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன். நீங்கள் சிறந்த பணியாற்றியதோடு, மிகுந்த தொல்லைகளுக்கும், அல்லல்களுக்கும் ஆட்பட்டிருக்கின்றீர்கள் என்பதை நான் அறிவேன். பாதிக்கப்பட்டோருக்கு உதவி புரிந்ததன் மூலம் அவர்களது நன்றிப் பெருக்கையும் அடைந்திருக்கின்றீர்கள்.

தூய்மையும், நேர்மையும் விரைவும் நிறைந்த ஒரு நிர்வாகத்தை நிலைநாட்ட நாம் அனைவரும் ஒருங்கிணைந்து நேர்மையுடனும் பற்று றுதியுடனும், எல்லாவகையிலும் முயல்வோமாக. நாட்டிலேயே சிறந்த நிர்வாகத்திறன் வாய்ந்தது என்ற நற்பெயர நமது தமிழ் நாடுஈட்டியுள்ளது. இந் நற்பெயர மேன் மேலும் ஓங்குவதற்கு நம்மால் ஆன அனைத்தையும் செய்வோம். தமிழ்நாட்டு மக்கள் மகிழ்ச்சியுடன் நலமும் வளமும் பெற்றுத் திகழ நீங்கள் மேற்கொள்ளும முயற்சிகள் அனைத்தும் வெற்றிபெறநான்வாழ்த்துகிறேன்.

இவ்வாறு ஆளுநர் பட்வாரி கூறினர்.

### துணைசபாநாயகர் திருநாவுக்கரசு நிகழ்ச்சிகள்

பிப். 5- காலை 10 மணி- குச்சிப்பாளையம் பள்ளி புதிய கட்டிடத் திறப்பு விழா 11 மணி அரிவழிமங்கல நிகழ்ச்சி, பிற்பகல் 3 மணி வடகரை. 3 30 மணி காக்கா கோட்டூர் நகர மக்கள் வரவேற்பு 4 மணி சுரக்குடி மேல்நிலை நீர்த்தொட்டி திறப்பு விழா. 5 மணி மணக்கால் கிராம நிகழ்ச்சி. 6 மணி- பொதுக் கூட்டம் - கொரடாச்சேரி.



### மோட்டார் பந்தயம்

(முதல்பக்கத்தொடர்ச்சி)

கிறேன்,

வெளிநாட்டில் நடைபெறும் இத்தகைய மோட்டார் பந்தயங்கள் பற்றி படங்களில் பார்க்கும்போது அவர்கள் இதில் எவ்வளவு ஆர்வம் காட்டுகிருர்கள்- எப்படி சிறந்து விளங்குகிருர்கள் என்பதை புரிந்துகொள்ள முடிகிறது

நாம் அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் நம்நாட்டில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளுக்கு- அரசின் சார்பில் பாராட்டை தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை மோட்டார் பந்தய சங்கம்இதுபோன்ற விளையாட்டுப் போட்டிகளை நடத்த ஸ்ரீபெரும்புதூரில் விளையாட்டு மைதானத்திற்கு நிலம் வாங்கி இருப்பதாக அறிகிறேன்!

#### அரசு ஊழியர்

வருங்காலத்தில் அங்கு மோட்டார் பந்தயம் நடக்க அரசு தன்னலான உதவிகளைச் செய்யும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

இவ்வாறுமுதல்வர் புரட்சித் தலைவர்பேசினர்,

முதலில் நடைபெற்ற மோட்டார் சைக்கிள் பந்தயத்தில் முதலாவதாக வந்து வெற்றி பெற்ற "கென்யா" நாட்டு வீரர் பில்டிகாரிசுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் கைகுலுக்கி பாராட்டு தெரிவித்தார்.

துவக்கத்தில் சென்னை மோட்டார் பந்தய சங்கத்தின் தலைவர் எஸ்: முத்து கிருஷ்ணன் வரவேற்று பேசினர். முடிவில்சந்தோக் நன்றி கூறினர்.



ஈரான் ராணுவத்துடன் உடன்பாடு

## போட்டி அரசு அமைக்க கோமேனி தீவிரம்

டெஹ்ரான், பிப். 4— ஈரானின் ஒரு தற்காலிக அரசை மிகவிரைவில் அறிவிக்கப்போவதாகவும், பக்தியார் அரசு பதவி விலகவில்லையெனில் புனித போர் நடைபெறும் என்றும அப்துல்லா கோமேனி அறிவித்துள்ளார்.

ஈரான் மன்னர் ஷா நியமித்துள்ள ஷாபூர் பக்தியாருக்குஎதிராகஒருதற்காலிக அரசை அமைக்கப் போவதாகவும் மதத்தலைவர் கோமேனி தெரிவித்துள்ளார்.

கோமேனிநிருபர்களிடம் பேசும்போது கூறியதாவது:-

நாங்கள் புரட்சிக் கவுன்சில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க விரும்புகிறோம் புரட்சிக் கவுன்சிலின் தலைவர் தற்காலிக அரசை நியமிப்பார் பதவி விலகவேண்டும் என்ற எங்களது பேச்சை பக்தியார் புறக்கணித்தால் பக்தியார் தொடர்ந்து பிடிவாதமாக இருந்து மக்களின் விருப்பங்களை மீறினல் ஒருபுனித யுத்தத்திற்கு அழைப்பு விடுவோம்.

பிரச்சினையை வன்முறை அல்லாத வழிகளில் தீர்க்க நாங்கள் முயலுவோம். எனினும் தருணம் வந்தால் தக்க இடங்களில் இருந்து போர்க்கருவிகளை பெறமுடியும்.

இவ்வாறு கோமேனி தெரிவித்தார்.

#### தூதரகத்தில் ரகளை

கடந்த வெள்ளி கிழமை இரவு பேருத் நகரில்உள்ள ஈரான் தூதரகத்திற்குள் சுமார் 200 ஈரானிய மாணவர்கள் பலவந்தமாக நுழைந்து, அதன்பெயரை ஈரான் இஸ்லாமியக் குடியரசு தூதரகம் என்று மாற்றியதாக தெரிகிறது, அங்கிருந்த மன்னர் படங்களை அழித்து அவற்றுக்கு பதிலாக கோமேனியின் படங்களை மாட்டினர்.

அமெரிக்காவில் உள்ள தனது தூதரகத்தில் பக்தியார் அரசின் அதிகாரம் மீண்டும்நிலைபெற்றிருப்பதை இது காட்டுகிறது என்று கருதப்படுகிறது.

வாஷிங்டனில் ஈரான் தூதரகத்திற்கு வெளியே பக்தியார் அரசைஎதிர்த்து 200 ஈரானிய இளைஞர்களை வாஷிங்டன் போலீசார் கைது செய்தார்கள்.

### பத்திரிகையாளர் ரெங்கையன் மறைவு

சென்னை, பிப். 4-அண்மைக்காலமாக உடல் நலிவுற்றுகள்ளக்குறிச்சிஅருகே தன் சொந்த கிராமத்தில் இருந்த பத்திரிகையாளர் ரங்கையன் மறைவு எய்தினர் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

மறைந்த ரெங்கையன் அண்ணா மக்கள் குரல், மற்றும் பல நாளிதழ்களில் பணிபுரிந்துள்ளார். அண்ணா நாளிதழில் பணியாற்றுவோர் சார்பில் அவரது குடும்பத்தாருக்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## நிர்வாண சோதனை தொடரும்

லண்டன், பிப். 4, லண்டன் விமான நிலையத்தில் இந்தியப்பெண்களிடம் நிர்வாண சோதனை நடத்துவது நிறுத்தப்படாது என்று தெரியவருகிறது.

இந்தியாவிலிருந்து லண்டன் சென்ற இந்தியப் பெண்களை நிர்வாணமாக வைத்து லண்டன் அதிகாரிகள் சோதனை நடத்தியதும் இதற்கு இந்தியா கடும் எதிர்ப்பு தெரிவித்திருப்பதும் தெரிந்ததே

ஏற்கெனவே ஒரு ஆசிரியையிடம் இவ்வாறு சோதனை நடந்ததாகத் தகவல் வந்தது தற்போது மேலும் 3 பெண்கள் தங்களை இவ்வாறு அதிகாரிகள் சோதனை போட்டதாக அறிவித்துள்ளனர்.

ஒரு கன்னிப்பெண் லண்டனுக்கு வருவதற்காக, தான் திருமண மானவள் என்று பொய் கூறுவதாக சந்தேகப்பட்டால் இவ்வாறுசோதனை நடத்துவதாகலண்டன் அதிகாரிகள் கூறியுள்ளனர்.

இது புதிதல்ல. ஏற்கனவே பலமுறை நிர்வாண சோதனை நடந்துள்ளது என்று அதிகாரிகள் கூறியுள்ளனர்.

அவ்வாறு சோதனைநடத்திய அதிகாரிகளை இங்கிலாந்து அரசு இன்னமும் கண்டிக்கவில்லை,

எனவே இந்தச் சோதனையைஅவர்கள் தொடர்ந்து நடத்துவார்கள் என்று தெரிகிறது.

### நன்றி அறிவிப்பு

தந்தை பெரியார்-பேரறிஞர் அண்ணா இவர்களின் தொண்டர்களில் ஒருவனை என்னை அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழக அவைத் தலைவராக்கி திராவிட பாரம்பரியத்தை இளம் தலைமுறையினர்களுக்கு உணர்ச்சியூட்டி வளர்த்து வருகின்ற தமிழக முதல்வர் புரட்சித்தலைவா அவர்களுக்கும் அமைச்சர் பெருமக்களுக்கும், பொதுக்குழு, செயற்குழு உறுப்பினர்களுக்கும், சட்டமன்ற, மேலவை, பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும், மாலை அணிவித்து வாழ்த்துக்கூறிய கழக அடலேறுகளுக்கும், பல்வேறு துறைகளைச் சேர்ந்த பெரியோர்களுக்கும் தபால்தந்தி மூலம் வாழ்த்துக்களை அனுப்பியவர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஈ. வே. அ. வள்ளிமுத்து
அவைத் தலைவர், அனைத்திந்திய அண்ணா தி.மு.க

### மகளிர்ப் பிரிவு செயலாளர் வளர்மதி நிகழ்ச்சிகள்

பிப்ரவரி 9, 10, 11, தஞ்சைநாடாளுமன்றத்தொகுதி ,, 12-திருச்சி, திருவானைக்காவல் 17 18பெங்களூர்

### மகளிர் பிரிவுத் தோழியர்களுக்கு

இதயதெய்வம் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களின் தலைமையில் நடைபெற்ற பேரறிஞர் அண்ணா அவர்களின் 10-வது நினைவுநாள் அமைதி ஊர்வலத்தில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்து கலந்துகொண்டு சிறப்பித்த மகளிர் பிரிவுத் தோழியர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவ்வண்ணமே தமிழகத்தின் ஏனைய நகரங்களில் நடைபெற்ற அண்ணா நினைவுநாள் ஊர்வலங்களில் பங்கேற்றுச் சிறப்பித்த தோழியர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பா. வளர்மதி
மகளிர் பிரிவுச் செயலாளர்;
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
4-2-79



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

[illegible] படத்தில் ஸ்ரீகாந்த், லதா

'சித்திரம் பேசுதடி' படத்தில் கண்ணன், வடிவுக்கரசி சுதர்சன்

# பேட்டியளிப்பதற்கு ரஜினிகாந்த் மறுப்பு

'வானவில்' என்ற பத்திரிகையின் நிருபர் சித்ரா. தொழிலதிபர் விஜய் என்பவரைப் பேட்டி காண பல தடைகளை மீறி அவனது அலுவலகத்துக்குள் செல்கிருள்.

''ம்... உங்களுக்கென்ன வேண்டும்?'' என்று சித்ராவைப்பார்த்து விஜய் கேட்கிருர்.

''சாரி நான் வானவில் பத்திரிகையின் நிருபர் என் பத்திரிகைக்காக உங்களை பேட்டி காண வேண்டும்'' என்கிருள் சித்ரா.

''மன்னிச்சிக்கங்க. நான் எந்த பத்திரிகைக்கும் பேட்டி தர்றதா இல்லே, நீங்க கிளம்பலாம்'' என்று பதில் சொல்லும் விஜய் உடனே அந்த இடத்தை விட்டும் கிளப்பி விடுகிருன் எப்படியாவது அவனை பேட்டி காண வேண்டும் என்று பிடிவாதமாகஉள்ள சித்ரா விஜயின் வீட்டிற்கு சென்று அவனை சந்திக்க முயற்சிக்கிருள். அவளை உள்ளே விட மறுக்கும் கூர்க்காவின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு வீட்டினுள் நுழைந்து விடுகிருள் சித்ரா. அவளைப் பார்த்து ஆத்திரம் அடையும் விஜய் ''நீங்கள் எத்தனை முறை வந்தாலும் என் பதில் ஒண்ணுதான், உங்களுக்கு என்னுல் பேட்டி கொடுக்க முடியாது'' என்று தீர்மானமாக மறுத்து விடுகிருன்,

இப்படியொரு காட்சி சாரு சித்ராவின் 'தர்மயுத்தம்' வண்ணப் படத்திற்காக படமாக்கப்பட்டது.

விஜய் ஆக ரஜினிகாந்தும், சித்ராவாக ஸ்ரீதேவியும் நடிக்க பாலகிருஷ்ணன் ஒளிப்பதிவு செய்தார். மற்றும் தேங்காய் சீனிவாசன், அசோகன், சுருளிராஜன், மனோரமா, வி கோபாலகிருஷ்ணன், லட்சுமிஸ்ரீ ஆகியோர் நடிக்கும் இப்படத்தின் கதை வசனத்தை செல்வகுமார் எழுதுகிருர்.

கண்ணதாசன், கவிஞர் வல்லபன் ஆகியோரின் பாடல்களுக்கு இளையராஜா இசையமைக்க டி ஆர் சீனிவாசன் தயாரிக்கும் இப்படத்தின் டைரக்ஷன் பொறுப்பை ஆர்.சி சக்தி ஏற்றுள்ளார்.

'நீலக்கடலின் ஓரத்திலே' படத்தில் ஸ்ரீபிரியா

# 'பாப்பாத்தி' தணிக்கை முடிந்தது

சின்னவர் கிரியேஷன்ஸ் தயாரிக்கும் வண்ணப் படமான 'பாப்பாத்தி' தணிக்கை செய்யப்பட்டு பின்னணி இசை சேர்ப்பு வேலைகள் நடந்து கொண்டுள்ளன. திரையுலகில் பெரும் பரபரப்பு உண்டாக்கி, பல்வேறு சோதனைகளில் மீண்டு 'A' சர்ட்டிபிகேட் பெற்று 'பாப்பாத்தி' 23 ஆம் தேதி வெளிவருகிறது.

ஆர்.கே. சண்முகம் திரைக்கதை வசனம் எழுதி முதன் முறையாக டைரக்ட் செய்துள்ள படம் இது!

காமக்கழுகின் கண்களில் பட்டு அலங்கோலமாக்கப்பட்ட பச்சைக்கிளி ஒன்றின் பரிதாபமான உண்மைக்கதை கதையின் நாயகியே கதாநாயகியாக வேடம் தாங்கி நடிக்கும் புதுமையான படம் இது.

தேங்காய் சீனிவாசன் ஜெய்கணேஷ், ரதிதேவி, மீரா, கே. கண்ணன், ஐசரிவேலன் குலதெய்வம்ராஜ கோபால், ஹெரான் ராமசாமி, சச்சு, சொர்ணு, ஸ்ரீராஜ், ராஜம் கிருஷ்ணன் மற்றும் பலர் நடிக்கின்றனர்.

கவிஞர் முத்துலிங்கம், நா. காமராசன் பாடல்களுக்கு ஜெய விஜயா இசையமைத்துள்ளார். துவாரகாநாத் ஒளிப்பதிவு செய்துள்ளார்.

பம்பாய் சிகப்பு விளக்குப் பகுதியில் படமாக்கப்பட்ட காட்சிகள், மலையாளத்திலேயே முழுதும் இடம் பெற்ற பாடல். இப்படி பல்வேறு புதிய அம்சங்களுடன் 'பாப்பாத்தி' வெளிவருகிறது.

ஆர் கே சண்முகம் திரைக்கதை வசனம் எழுதி டைரக்ட் செய்துள்ளார்.

# குகநாதன் நடிக்கிருர்

பாலாஜி சினி ஆர்ட்ஸ் என்னும் புதிய பட நிறுவனத்தினர் தயாரிக்கும் 'மனிதனைத் தேடுகிறேன்' வண்ணப்படத்தில் கதாசிரியர் டைரக்டர் குகநாதன் முக்கிய பாத்திரம் ஒன்றில் நடிக்கிருர்.

குகநாதனுடன் சரத்பாபு, கவுண்டமணி, வி. கோபாலகிருஷ்ணன், மகேந்திரன், கே கண்ணன் சத்யப்பிரியா, மனோரமா, காந்திமதி, புதுமுகம் விஜயகலா ஆகியோர் நடிக்கும் இப்படத்திற்காக பூவை செங்குட்டுவன் எழுதிய பாடல்ஒன்று ஷியாம் இசையமைப்பில் பதிவு செய்யப்பட்டது.

'தாய்கொடுத்த
சீதனமோ
தண்ணிலவு உன் முகமோ
புன்னகையின் மோகனமோ
உந்தன் நெஞ்சம்
ஆலயமோ'

என்று தொடங்கும் இப்பாடலை எஸ். ஜானகி பாடியுள்ளார். கணேசபாண்டியன் ஒளிப்பதிவு செய்ய கே. எஸ். மணி தயாரிக்கிருர். கதை வசனம் டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புகளையும் ஆர்.சி. சக்தி ஏற்றுள்ளார்.

# ஸ்ரீதேவியை காதலிக்க கமலஹாசனுக்கு வி.கே. ஆர். யோசனை

செண்பகத்தைத் தீவிரமாக காதலிக்கிருன் கல்யாணம். ஆனல் செண்பகமோ அவன் பக்கம் திருப்பிக்கூட பார்க்கமாட்டேன் என்கிருள்.

அவளைத் தன் பக்கம் திருப்ப வழி தெரியாமல் தடுமாறும் கல்யாணம், தன் வீட்டுச் சமையற்காரரான சாமிப்பிள்ளையிடம் ''நான் செண்பகத்தோடு உல்லாசமாக சுற்ற ஏதாவது ஒரு ஐடியா கொடு, அவளுடைய நினைப்பில் ராத்திரி பூரா தூக்கம் கூட வரமாட்டேங்குது'' என்கிருன்.

''நீ தூங்கறதுக்கும் அவளைக் காதலிக்கிறதுக்கும் சேர்த்து ஒரு ஐடியா சொல்றேன் ராத்திரி படுக்கும்போது செண்பகத்தை நினைச்சுக்கிட்டே படுத்துக் கொள். நல்லா தூங்கு. நீ யாரை நினைச்சுக்கிட்டு படுக்கிறியோ அவங்கதான் உன் கனவில் வருவாங்க அதனுல் செண்பகம் உன் கனவில் வருவா, நிஜமாயிட்டு அவளோடே ஆடலாம், பாடலாம்'' என்று யோசனை சொல்கிருர் சாமிப்பிள்ளை.

இப்படிப்பொரு காட்சி பி. ஏ. ஆர்ட் புரொடக்ஷன்ஸ் 'கல்யாணராமன்' வண்ணப் படத்திற்காக ஏ. வி. எம் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

கல்யாணமாக கமலஹாசனும், செண்பகமாக ஸ்ரீதேவியும், சாமிப்பிள்ளையாக வி. கே. ராமசாமியும் நடிக்க எம். எஸ். விஸ்வநாதன் ஒளிப்பதிவு செய்தார்.

தேங்காய் சீனிவாசன், சுருளிராஜன், மேஜர்சுந்தரராஜன், செந்தாமரை, புஷ்பலதா, ஆகியோர் நடிக்கும் இப்படத்தில் ஸ்ரீபிரியாவும் நடிக்கிருர்.

பஞ்சு அருணசலம் கதை வசனம் பாடல்களை எழுத இளையராஜா இசையமைக்கிருர். டைரக்ஷன் பொறுப்பை ஜி. என். ரங்கராஜன் ஏற்றுள்ளார்.

ராஜேஸ்வரி படத்தில லட்சுமி ஸ்ரீ

# காதலித்துப் பார

நிரஞ்சனி பிலிம்சார் 'காதலித்துப் பார்' என்ற பெயரில் படம் ஒன்றைத் தயாரித்து வருகின்றனர்.

''காதலித்துப் பார், காதலித்துப் பார் காதலித்துப்பாரு உலகைப் பாரு உல்லாசம் ஜோரு'' என்று தொடங்கும் கவிஞர் ஆற்றலரசு எழுதிய பாடல் ஒன்று சாரதா ஸ்டுடியோவில் ஒலிப்பதிவு செய்யப்பட்டது.

சங்கர்-கணேஷ் இசையமைத்தனர். எஸ். பி. பொன்னுசாமி டி. கே. கலா பாடினர்.

தேங்காய் சீனிவாசன், ஜாசிவேலன், சுருளிராஜன், மகேந்திரன், நாகேஷ், மனோரமா, தங்கவேலு, சச்சு, லட்சுமிஸ்ரீ, விஜயகீதா, ரஜனி ஆகியோர் இப்படத்தில் நடிக்கின்றனர். ஜெகநாத் கிருஷ்ணனின் கதைக்கு மா. ரா. திரைக்கதை வசனம் எழுதுகிருர். ஏ. ஜெகந்நாதன் டைரக்ட் செய்கிருர். ஜக்கு தயாரிக்கிருர்.

# பால்காரி

மீனட்சி இந்திரா பிலிம்சாரின் 'பால்காரி' படப்பிடிப்பு முழுவதும் மதுரையிலேயே நடைபெறுகிறது. ரவிக்குமார், வெண்ணிற ஆடைமூர்த்தி, நிருமலா, சாவித்ரிஜன், ஆலம், ஆகியோர் நடிக்கின்றனர். திரைக்கதையை வசனம் எழுதி கே. சோமு டைரக்ட் செய்கிருர்.

காமசாஸ்திரம்' படத்தில் ஜெய்கணேஷ், சீமா

# கலை விருந்து

படத்தயாரிப்பாளர் சின்னப்பதேவரின் மகள்திருமண விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர், மணமக்கள் தண்டாயுதபாணி, டைரக்டர் தியாகராஜன்

## 'நீலக்கடலின் ஓரத்திலே'

பொன்னண்டோ புரொடக்ஷன்ஸ்சார் தயாரித்து வந்த நீலக்கடலின் ஓரத்திலே வண்ணப்படத்தின் படப்பிடிப்புமுடிவடைந்தது

இம்மாத வெளியீடான இப்படத்தில் இலங்கை நடிகர் காமினி பொன்சேகா, ஸ்ரீபிரியா, ராதா சலூஜா, ஜெய்கணேஷ், சொர்ணு, எம். என் நம்பியார், தேங்காய் சீனிவாசன் மற்றும் பலர் நடித்துள்ளார்கள்.

கதை வசனத்தை கலைமணி எழுதியுள்ளார். ஒளிப்பதிவை ராஜாராம் கவனித்துள்ளார்.

புலமைப்பித்தன் பாடல்களுக்கு எம் எஸ் விஸ்வநாதன் இசையமைத்துள்ளார்,

பொன்னண்டோ தயாரித்துள்ள இப்படத்தை கே. சங்கர் டைரக்ட் செய்துள்ளார்.

## 'நினைத்தாலே இனிக்கும்'

பிரேமாலயா தயாரித்து வந்த 'நினைத்தாலே இனிக்கும்' வண்ணப்படத்தின் படப்பிடிப்பு முடிவடைந்தது,

சிங்கப்பூரில் படமாக்கப்பட்ட இப்படத்தில் கமலஹாசன், ரஜினிகாந்த், ஜெயபிரதா கீதா மற்றும் பல புதுமுகங்களும் நடித்துள்ளனர்.

இம்மாத வெளியீடான இப்படத்தின் கதையை சுஜாதா எழுதியுள்ளார். ஒளிப்பதிவை லோகநாதன் கவனித்துள்ளார். கவிஞர் கண்ணதாசன் பாடல்களுக்கு எம். எஸ். விஸ்வநாதன் இசையமைத்துள்ளார். ஆர். வெங்கட்ராமன் தயாரித்துள்ள இப்படத்தின் திரைக் கதை வசனம் டைரக்ஷனை கே. பாலசந்தர் கவனித்துள்ளார்

## புதுமுகத்தைக் கண்டு இந்திநடிகர் ஓட்டம்

கிரிக்கெட் போட்டியில் தன் நண்பன் பாபுவோடு சேர்ந்து கொண்டு வெற்றிகளைக் குவித்து விட்டு உற்சாகமாக வெளியே நடந்து வருகிருன் மதன் ஏராளமான இளம் பெண்கள் கூட்டம் அவர்களுடைய வெற்றியைப் பாராட்ட வருகிறது. தானுகச் சென்று அவர்களைக் கட்டியணைத்து அவர்கள் அன்பை ஏற்றுக்கொள்கிருன் மதன். ஆனல் பாபுவோ ''நான் குளிச்சிட்டு அப்புறம் வர்றேன்'' என்று சொல்லிவிட்டு ஓடி விடுகிருன்.

பாபுவின் இந்தகுணத்தை மாற்ற தன் நண்பர்களோடு சேர்ந்து திட்டம் போடுகிருன் மதன். அன்று இரவு பாபு தூங்கும்போது அழகான இளம்பெண் ஒருத்தியை பாபுவின் அறைக்கும் அனுப்புகிருன்

''மதன் ஆள் புதுசு பார்த்து நடந்துக்க'' என்று அவளுக்குஎச்சரிக்கை செய்கிருன்.

தூக்கத்தில் இருக்கும் பாபுவை அந்தஇளம்பெண் கட்டியணைக்கிருள். 'திடீர்' என்று விழித்துக்கொள்ளும் பாபு அவளிடமிருந்து தப்பி ஓட முயற்சிக்கிருன். ஆனல் அவளோ அசுரபலத்தோடு அவனை கட்டிலில் சாய்க்கிருள்.

இப்படி ஒரு காட்சி லலிதா ஆர்ட்ஸ் 'நிர்வாணம்' படத்திற்காக படமாக்கப்பட்டது. பாபுவாக, இந்தி நடிகர் விக்ரமும் மதனுக சரத்பாபுவும் இளம் பெண்ணுகபுதுமுகம் விஜியும் நடித்தனர்.

துரைடைரக்ட் செய்கிருர்.

## நடன அரங்கேற்றம்

குமாரி கீதாவின் நடன அரங்கேற்றம் சென்னை மியூசியம் கலையரங்கில் நடைபெற்றதுவிஜயகுமார் மஞ்சுளா இருவரும் நடனத்தைப் பார்த்துப் பாராட்டினர்.

நடனத்தைப் பார்க்க வந்த சோவியத் தம்பதிகள் இருவர் கீதாவை வாழ்த்தி சிலை ஒன்றை வழங்கினர், கீதா 'உறவுக்கு ஒருத்தி' படத்தில் நடித்துள்ளார்.

'கன்னிப்பருவத்திலே' படத்தில் புதுமுகம் ஜெயா

## சிவாஜி கணேசனுக்கு அண்ணு வாழ்த்து!

'இந்த மலர் அரும்பாக இருக்கும் போதே இது எப்படி மணம் பரப்பும் என்பதை அறிந்தவன் நான். மார்லன் பிராண்டோவுக்கு இணையாக நடிக்கக் கூடிய அவர் எங்கிருந்தாலும் வாழ்க' என்று பேரறிஞர் அண்ணுவினுல் பாராட்டப்பட்டவர்...

அண்ணுவின் நாடகத்தில் சிவாஜியாக சிறப்பாக நடித்து தன் பெயரோடு சிவாஜியையும் இணைத்துக் கொண்டு, தந்தை பெரியாரால் பாராட்டப்பட்டவர் சிவாஜி கணேசன் என்பது அனைவரும் அறிந்த ஒன்று!

அண்ணுவின் இதயக்கனி புரட்சித் தலைவராலும் 'தம்பி ..' என்று உள்ளன்போடு அழைக்கப்படுபவர்-செய்ரோவில் சிறந்த நடிகருக்கான பரிசு பெற்று திரும்பியபோது புரட்சித்தலைவர்நடத்திய பாராட்டுவிழா.. பரிசளிப்பு இவைகளைத்தான் மறக்க முடியுமா?

1952 ஆம் ஆண்டில் திரையுலகில் 'பராசக்தி' படத்தின் மூலம் காலடி எடுத்து வைத்து, 100வது படமாக நவராத்திரி' கண்டு 1979 ஜனவரியில் சிவாஜிகணேசன் நடித்து 200 வது படமாக 'திரிசூலம்' வெளிவருகிறது. பக்தர்கள் மட்டுமல்ல மற்றவர்களும், . . (1) பராசக்தி. . , (100) நவராத்திரி, (200) திரிசூலம் என்ற பெயர்கள் பொருத்தத்தை ரசிக்கலாம்!

தமிழில் 192 படங்களிலும் தெலுங்கில் 5 படங்களிலும், மலையாளத்தில் ஒரு படமும், இந்தியில் இரு படங்களுமாக 200 படங்கள் வெளிவந்துள்ளன.

கலையுலகில் சிவாஜி கணேசன் பெற்ற வெற்றிகள், அடைந்த பாராட்டுகள் . . , பரிசுகள் எண்ணிக்கையில் அடங்காது!

200வது படமாக 'திரிசூலம்' வெளிவரும் இந்த சமயத்தில் அடுத்தடுத்து அந்தக் காட்சிகள் எனது நினைவுத் திரையில் தெரிகின்றன...!

தமிழகத்திற்குப் பெருமை சேர்க்கின்ற கலைஞர்களில் சிவாஜி கணேசன் குறிப்பிடத்தக்கவர். அவரது கலையுலக வெற்றிப் பயணம் தொடர்ந்து புகழைக் குவிக்க வேண்டுமென்று வாழ்த்துகிறேன்!

அன்று பேரறிஞர் அண்ணு வாழ்த்தினர்!

இன்று 'அண்ணு' வாழ்த்துகிறது!

## 'திரிசூலம்'

-:எக்ஸ்-ரே:-

நாகை தருமன்

நேர்மையே உருவாக உள்ள ராஜசேகரன் கோவில் சிலைகளைத் திருடி விற்க தனது கூட்டாளிகள் முயற்சிப்பதைக் கண்டு கடுமையாகக் கண்டிக்கிருர்.

கூட்டாளிகளுக்குள் தகராறு வருகிறது ஒருவன் கொல்லப்படுகிருன்-பழி ராஜசேகரன்மீது விழுகிறது. பயந்து ஒளிந்து ஓடுகிற ராஜசேகரன் கர்ப்பவதியான தன் மனைவியை விட்டுப் பிரியும் நிலை ஏற்படுகிறது!

ராஜசேகரன் மனைவி சுமதி மிகவும் சிரமப்பட்டு தான் பெற்ற குழந்தையை வளர்த்து பெரியவனுக்குகிருள்.

ராஜசேகரன் காஷ்மீரில் மறைந்து வாழ்கிருர் எப்படியோ..மீண்டும் கூட்டாளிகள் அவரைக்கண்டு விடுகின்றனர். மீண்டும் சோதனைகள் தொடர்கின்றன.

ராஜசேகரனின் பிள்ளைகள் குழப்பத்தைத் தவிர்த்து, குடும்பத்தை ஒன்று சேர்க்கின்றனர்.

தீமையை எதிர்ப்பதில் தந்தையும் இரு மகன்களும் 'திரிசூல'மாக இருக்கின்றனர்.

சிவாஜி கணேசன் மூன்று வேடங்களில் நடிப்பது அவருக்கு ஒன்றும் புதிதல்ல! ஆனல் இதல் மாறுதலாகவும் மேலும் மெருகூட்டும் வண்ணம் சிறப்பாகவும் செய்துள்ளார்!

மனைவியிடம் கொஞ்சல்... குழைவு நெருக்கம்.. கிண்டல்..

கூட்டாளிகள் தவறைக் கண்டிக்கும் போது சீற்றம்.. தப்பி ஓடும் போதும்... ரயிலில் மனைவியை விட்டுவிட்டுத் தவிக்கும்போது காட்டும்-பதட்டம்...

சவுக்கால் தன்னைத்தானே அடித்துக் கொண்டு துடிக்கும் துடிப்பு...மருமகளிடம் கையசைவால் பதிலளிப்பது, பல ஆண்டுகள் பிரிந்த மனைவியின் குரலை போனில் கேட்டதும் ஏற்படும் மகிழ்ச்சி... தடுமாற்றம்...!

அப்பப்பா... அப்பா ராஜசேகரனுக சிவாஜி கணேசன் நடிப்பு பிரமாதம்!

மகன்.. குரு வேடத்தில் சிருங்காரம்-சரியான துறுதுறுப்பு! கண்ணும் நாக்கும் கால்களும்தான் எத்தனை சுறுசுறுப்பாக இயங்குகின்றன!

சங்கர் நடிப்பில சாந்தம் சப்பிரம் இரண்டும்ம உண்டு!

எத்தனை வேடங்களில் நடிக்கிருர் என்பது கூட பெரிதல்ல - - - அத்தனையிலும் ஒரு மாறுதல்... ஒரு முத்திரை..! தனித்தன்மை இருக்கிறதே.., அதுதான் சிவாஜிகணேசன்!

சிவாஜி கணேசனுடன் இணைந்து திறமை காட்டி நடிப்பதற்கு ஏற்றவர் கே. ஆர். விஜயா என்பதை இந்தப் படமும் சொல்லுகிறது. டெலிபோனை விட்டுவிட்டு தவித்துப் பேசும் ஒரு காட்சி போதாதா?

ஸ்ரீபிரியா அலங்கார பொம்மை.., வந்து போகிருர்!

நம்பியார். ஜெய்கணேஷ், ரீனு, வி.கே.ராமசாமி, தேங்காய்சீனிவாசன், மேஜர்சுந்தர்ராஜன் ஆகிய அனைவரும் சிறப்பாகச் செய்துள்ளனர்.

விசுவநாதன் இசையமைப்பில் 'என் ராஜாத்தி வாருங்கடி', 'மலர்கொடுத்தேன்', 'கட்டிச்கிடக்கு கட்டில் இருக்கு' பாடல்கள் இனிமையாக உள்ளன.

ஏ. எல், நாராயணன் எழுதிய உரையாடல்கள் குடும்பப்பாங்காக அளவோடு அழகாக உள்ளன. ஒளிப்பதிவு அருமையாக உள்ளது.

தாய் எதிரிகளிடம் அகப்பட்டுக் கொண்டுவிட்டாள் என்று தெரிந்தபின்பு பிள்ளைகள் குஷியாகப் பாடிக் கொண்டு ஒருவர் தோள்மீது ஒருவர் ஏறிவிளையாடி சிரித்துக்கொண்டு போவார்களா? தந்திரக் காட்சிகளைச் சிறப்பாகச் செய்ய வேண்டும் என்பதற்காக இந்தக் காட்சி எடுக்கப்பட்டிருக்கிறது. ராஜசேகரன் கொலைகாரர் என்பதைக் குறிப்பிடவே இல்லையே.

டைரக்டர் கே. விஜயன் பொழுதுபோக்கு அம்சங்களுடன் விறுவிறுப்பாக இயக்கியுள்ளார். அடுத்தடுத்து ஏற்படும் திருப்பங்கள் நன்ருக உள்ளன.

மொத்தத்தில் —

**சிவாஜிகணேசனின் கலைப்பயணத்தில் இது ஒரு (சாதனை) மைல்கல்!**